30th September 1958]

THE HON. SRI M. A. MANICKAVELU : இதையெல்லாம் பரிசீலனை செய்துதான் இந்த அணையும், கிருஷ்ணகிரி அணையும், சாத்தனூர் அணையும் கட்டப்பட்டது. முப்பது வருஷத்திய மழை அளவைப் பார்த்து, வரக் கூடிய தண்ணீரைப் பார்த்து, இருக்கும் நிலைமை பாதிக்கப்படாமல் தான் அணைகள் கட்டப்படுகின்றன.

SRI A. GOVINDASAMY : அங்கத்தினருடைய கருத்தாக இருக்கலாம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். சாத்தனூர் திட்டத்தினால் போதுமான தண்ணீர் வரவில்லை என்று பி. டபிள்யூ. டி. அமைச்சர் அவர்களிடம் சொன்னோம். இப்போது தண்ணீர் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தண்ணீர் தேக்கத்தால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இப்படித் தடுத்து நிறுத்தாமல் வேண்டிய தண்ணீரை விடுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : எனக்கு வந்த தகவல் கிருஷ்ணகிரி அணைக்கட்டு நிறம்பி மேற்கொண்டு போகிறது. சாத்தனூரிலும் அப்படித்தான் போகிறது.

MR. SPEAKER : It is now 10 o'clock. I have got two more questions. I shall take five minutes more and finish them.

*Pokku Vaikal Drainage Scheme.*

* 668 Q.—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா, திருத்துறைப்பூண்டி தாலூகா, போக்கு வாய்க்கால் வடிகால் திட்டம் சாங்ஷனாகிவிட்டதா?

(ஆ) இதற்குப் பிடிக்கும் செலவு எவ்வளவு?

(இ) எப்போது பூர்த்தியாகும்?

THE HON. SRI P. KAKKAN : (அ) இந்தத் திட்டம் இன்னும் அங்கீகரிக்கப்படவில்லை.

(ஆ), (இ) இந்தக் கேள்விகள் எழாது.

SRI A. VEDARATHNAM : இந்த வடிகால் வசதி செய்யாத காரணத்தினால் சென்ற ஆண்டு வெள்ளச் சேதத்தினால் ஏராளமான நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. அதுபோன்று மீண்டும் வெள்ளச் சேதம் ஏற்படாமலிருக்க இந்தப் போக்கு வாய்க்கால் திட்டத்தை அரசாங்கம் எடுத்துக்கொள்ள முன் வருவார்களா?

THE HON. SRI P. KAKKAN : இந்தத் திட்டமே இன்னும் அங்கீகரிக்கப்படவில்லை என்றுதான் நான் சொன்னேன். இருந்தாலும் இதைப் பார்த்து எந்த நிலைமையிலே இருக்கிறது என்பதைப் பரிசீலிக்க ஏற்பாடு செய்கிறேன்.

*Tindivanam Municipality drinking-water supply scheme*

* 669 Q.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state the stage at which the drinking-water supply scheme for Tindivanam Municipality stands?

THE HON. SRI M. A. MANICKAVELU : The Head works, the Pumping Main and the R.C.C. Service Reservoir for the Tindivanam water-supply scheme are nearing completion. The distribution system is expected to be completed by December 1958. The erection of the pumping plant will be taken up immediately after the pumps ordered are received.